20th January 1961]

*Land reforms*

*** 18 Q.—Sri S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் நியாய வாரச் சட்டம் போன்ற நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் எந்த அளவில் அமுல் நடத்தப்படுகின்றன என்பதைப்பற்றி திட்டக் கமிஷன் கேட்டுள்ளதா ?

(இ) அப்படியாயின் இம்மாநில சர்க்கார் அனுப்பிய பதிலின் விவரமென்ன ?

The Hon. Sri M.A. MANICKAVELU : (அ) Yes.

(இ) The objects and aims as well as the salient provisions and satisfactory working and achievement of the several tenancy Acts in force in this State have been explained to the Planning Commission.

**Sri S. M. ANNAMALAI :** இந்த நியாயவாரச் சட்டம், சாகுபடியாளர் பாதுகாப்புச் சட்டம் எல்லாம் நம் மாநிலத்தைப் பொறுத்தவரையில் சரியாக அமுல் நடத்தப்படவில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அவை எவ்வாறு அமுல் செய்யப்படுகிறது என்பதை ஆராய ஒரு கமிட்டி நியமித்து இந்த மாநிலத்தில் அப்படிப்பட்ட சட்டங்கள் நல்லமுறையில் நடப்பதற்குத் தகுந்த நடவடிக்கையை எடுத்துக்கொள்வார்களா ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** எனக்குத் தெரிந்த வரையில் இந்தச் சட்டங்கள் நல்லமுறையில்தான் நடைபெறுகின்றன. கனம் அங்கத்தினர் சரியாக இல்லை என்றால் குறிப்பாக எழுதினால் அதைப்பற்றிக் கவனிக்கலாம்.

*Kalambur Panchayat Board*

*** 19 Q.—Sri S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) களம்பூர் பஞ்சாயத்து போர்டாரிடம் இருந்து இனாம் நிலம் நெ. 540, விஸ்தீரணம் 2.17 ஏகரா நிலத்தை பஞ்சாயத்து போர்டுக்கு சொந்தமாக்க வேண்டுமென்று கடிதம் வந்ததா ?

(இ) அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

The Hon. Sri M. A. MANICKAVELU : (அ) A letter from the Executive Officer, Kalambur Panchayat, has been received by the Collector of North Arcot in the matter.

(இ) The land in question is not at the disposal of the Government. Proposals for resumption of the land are under consideration by the Collector.

[20th January 1961

SRI S. M. ANNAMALAI : கலெக்டருடைய பரிசிலனையில் இருக்கும்போது அந்த நிலத்தில் உள்ள மரங்களை வெட்டி எடுத்துச் செல்கிறார்கள். இதுபற்றி கலெக்டருக்கு தபால் எழுதினேன். அதைத் தடுக்க அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சி என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் கலெக்டருக்கு எழுதினால் அங்கிருந்து பதில் கிடைக்கும். எனக்கு எழுதினால் நான் அதைப்பற்றி விசாரித்து தகவல் எழுதுகிறேன்.

*Tirupur Water-supply Scheme*

*20 Q.—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Revenue be pleased to state the present stage of the scheme for the supply of water to Tirupur in Coimbatore district?

THE HON. SRI M. A. MANICKAVELU : Laying of conveying mains from headworks and distribution system in Tiruppur town and construction of the R.C.C. elevated Reservoir and the ground level service reservoir have been completed. The work relating to the construction of headworks and the erection of booster units are in progress. The entire scheme is scheduled to be completed by September 1961.

*Compulsory Education*

*21 Q.—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) ஆறு வயது முதல் பதினொன்று வயதடைந்த ஆரம்பக் கல்வி கற்க லாயக்கான சிறுவர் சிறுமியர்களுக்குக் கட்டாயக் கல்வி கற்பதற்கான அரசாங்க திட்டமானது எப்போது அமுலுக்குக் கொண்டுவரப்படும் ?

(இ) மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே வருடந்தோறும் எத்தனை சிறுவர் சிறுமியர்களுக்குக் கட்டாய ஆரம்பப் பயிற்சியளிக்கத் திட்டமிடப்பட்டிருக்கின்றது ?

(உ) இத்திட்டத்திற்காக வருடந்தோறும் எத்தனை ஆசிரியர்கள் தேவைப்படுவார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ), (இ) & (உ) A statement [a] is placed on the table of the House.

SRI S. M. ANNAMALAI : கட்டாய ஆரம்பக் கல்வி பயிற்சி பெற தகுதி வாய்ந்தவர்கள் எத்தனை பேர்கள் இருக்கிறார்கள் என்ற புள்ளிவிவரங்கள் சர்க்காரால் சேகரிக்கப்பட்டிருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : புள்ளிவிவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கிறது.

[a] Printed as Appendix II on page 131 infra.